உ

குருவே துணை

பாண்டிச்சேரி

# முருகப்பெருமான் பைந்தமிழ்த்திரட்டு

ஆசிரியர்

மகான்-வண்ணச்சரபம்

அருள்மிகு, **தண்டபாணி சுவாமிகள்**

திருவாமாத்தூர்

புதுவையில் நிகழ்ந்த

அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்

# நினைவு விழா மலர்

திருவாமாத்தூர் - கௌமாரசபை வெளியீடு 104.

உ

குருவே துணை

பாண்டிச்சேரி

# முருகப் பெருமான் பைந்தமிழ்த் திரட்டு.

ஆசிரியர்:

மகான்–வண்ணச்சரபம்

திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்

என வழங்கும்

அருள்மிகு. **தண்டபாணி சுவாமிகள்**

திருவாமாத்தூர்.

பாண்டிச்சேரியில் 24–5–70ல்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் நினைவு விழா

கொண்டாடியபோது

கோவை–சிரவணபுரம் கௌமார மடாலயத் தலைவர்

தவத்திரு. சுந்தர சுவாமிகள் தலைமையில்

பேரூர். சாந்தலிங்க சுவாமிகள் மடாலயத் தலைவர்

தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகள் அவர்களால்

வெளியிடப்பெற்ற மலர்

பதிப்பாளர்:

பாண்டிச்சேரி ஆனந்தா எம்போரியம் உரிமையாளர்

உயர்திரு. ந. கோவிந்தசாமி அவர்கள்

**1970**

## உள்ளுரை




போன் : 975

அச்சிட்டோர் :

**கற்பகம் பிரிண்டர்ஸ்,**

32, அம்பலத்தாடையர்மடத்து வீதி,

**புதுச்சேரி.**

திருவாமாத்தூர் - கௌமார மடாலயத்தலைவரும்
இந்நூலாசிரியர் சுவாமிகள் பெயராருமாகிய
தவத்திரு, தி. செ முருகதாச ஐயா அவர்கள் வழங்கும்

# பதிப்புப்பாயிரம்

## வெண்பா

நீண்டிலகு பல்சீர் நிலவு புதுவையெனும்
பாண்டிச்சே ரிப்பேர் பதியிலன்பர் – வேண்டியவை
எல்லாம் கொடுக்கும் இனிமையவிர் இப்பாடல்
வல்லார்கொள் வார்பல் வரம்.

புதுவையினில் வாழ்ந்து பொருவில்சுந்த ரம்மை
வதுவைபெற்று மாதவச்சீர் வாய்ந்து – முதுபுகழ்சேர்
சண்மதமும் மேலாம் சமரசஆ னந்தமும்சேர்
பண்மலி பாட்டோதும் பரன்.

இவ்வரிய நூலை இயற்றுவண் ணச்சரபன்
செவ்வணியார் சந்தத் திருப்புகழோன் – ஒவ்வரிய
தண்டபா ணிப்பேர்த் தவன்,முருக தாசனெனக்
கொண்டமுப் பேர் கொள்ளும் குரு.

வானந் திகழமரர் வாழ்த்தும் தகைமையினில்
ஆனந்தா எம்போர்யம் ஆக்கினேன் - தானத்
தருமம்செய் கோவிந்த சமிகுண சீலன்
அருமைகொடச் சிட்டளித்தான் ஆய்ந்து.

தண்டபா ணிப்பேர்த் தவன்விழாச் செய்யுமிநாள்
கொண்டநினை வாகக் கொடுத்துவந்தான் – மண்டலமும்
விண்டலமும் போற்ற மிகுபுகழாய் வாழ்கவே
அண்டரும்சொல் சீர்பெற் றவிர்ந்து.



புதுவை ஆனந்தா எம்போரியம் உரிமையாளர்
திரு, **ந. கோவிந்தசாமி** அவர்கட்குப்

# பாராட்டு வாழ்த்து

தண்டமிழ் நாட்டைச் சார்ந்து விளங்கும்
புதுவைமா நகரிற் பொலிவுறும் அன்பர்,
சிந்தைக் கினிய சிறந்தநட் பாளர்,
செந்தமிழ்ப் புலவர் சீரிய நட்பும்
கன்னித் தமிழினில் கவினும்நல் லார்வமும்
கொண்டவிர் நல்லோர், குலவும் ஆனந்தா
எம்போ ரியப்பேர் ஏய்ந்த மருந்தகம்
வைத்துத் தொழில்நலம் வாய்ந்தபண் பாளர்,
மக்கட் செல்வம் வாய்ந்திடப் பெற்றோர்.
குணமிகு பெரியர், கோவிந்த சாமிப்
பெயரினர் நல்லறம் பீடுறச் செய்வோர்
வண்ணச் சரப மகான் தண்ட பாணி
பாடி யருளிய பற்பல பதிகளுள்
புதுவை இறைவர்மேல் போற்றித் துதித்த
நூல்களுள் முருகன் நுண்புகழ் குறித்த
பாடல்க ளனைத்தையும் பாங்குறத் தொகுத்துத்
தம்பொருள் கொண்டு தாம்பதிப் பித்தே
தண்டபா ணிப்பேர்த் தவமுனி நினைவுநாள்
கொண்டா டியபோது குலவுநல் மகிழ்வால்
வெளியிடச் செய்த மேலவர், இன்னோர்
சுற்றமும் குடும்பமும் சூழ்ந்தநல் வாழ்வு
பெற்றிடப் பல்லாண் டுற்றிட வாழ்கவே.

திருவமாத்தூர் P.O.
விழுப்புரம்
15-5-70

நூலாசிரியர் சுவாமிகள் பெயரர்
**தி. செ. முருகதாச ஐயா**
கௌமாரமடாலயத் தலைவர்

# நன்றியுரை



19-ம் நூற்றாண்டில் பல்விதமான சிறப்புகளையும் ஒருங்கே பெற்று வாழ்ந்தவர் **வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்**. இப்புலவர் பெருந்தகை அருளிய நூல்கள் மிகப்பல. அவையனைத்தையும் அவர்களே பனையோலைச் சுவடியில் எழுதிவைத்துள்ளனர் அவைகளுள் பதிப்பிற்கு வந்தவை சில. வராமலிருப்பவைகள் பல. புதுவைக்குப் பாடியுள்ள நூல்களுள் ஒருபகுதி இன்று வெளியிடப்பெறுகிறது.

புதுவையில் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் விழா நடைபெறும் காலத்தில் அவ்வூர் பற்றி அவர் அருளிய நூல்களுள் ஒருபகுதியைப் பதித்துத்தர வேண்டுமெனப் புதுவை ஆனந்தா எம்போரியம் உரிமையாளரும், எனது நெருங்கிய நண்பருமான திரு **ந. கோவிந்தசாமி** அவர்களிடம் கேட்டுக்கொண்டேன்.

நூல்களின் சிறப்பையும், என் பெருவிருப்பையும் அறிந்து தம்பொருள் கொண்டு பதித்து ஷை விழா நிகழ் நாளில் உதவிய எனது நண்பர் திரு, கோவிந்தசாமி அவர்கட்கு எனது நன்றியும் வாழ்த்தும் உரித்தாகுக.

டாக்டர் **து. தியாகராசன்**
ஸ்ரீ தண்டபாணிசுவாமிகள் நூல்
வெளியீட்டுக் குழுத்தலைவர்
விழுப்புரம்.



மகான் வண்ணச்சரபம்

அருள்மிகு. தண்டபாணிசுவாமிகள்

உ
கணபதி துணை

# மணற்குள விநாயகர் பதிகம்

## காப்பு வெண்பா

*மன்னும் புதுவை மணற்குளவி நாயகன்மேற்*
*பன்னும் தமிழ்ப்பாடல் பத்துக்கும்—மின்னுறழும்*
*சிற்றிடைசேர் வள்ளிமுனம் சிந்துரமா கிப்புனத்திற்*
*சுற்றிவரும் நற்றான் துணை*

## கொச்சகக்கலிப்பா

*திருமகள்கோன் அந்நாளில் தெண்டனிடக் கண்டுடனே*
1 *தரும்நலம்கேட் டுன்னடிக்கீழ்த் தமியேனும் வந்தடைந்தேன்*
*கருணைமதம் ஊற்றெடுக்கும் 2 கடக்களிற்றுமுகத் தானே*
*மருமலியும் பொழிற்புதுவை மணற்குளவி நாயகனே* 1

*பொய்குறைந்து மெய்யெல்லாம் பொலிவடையத் தினம்நாடிச்*
*செய்குவதொன் றறியாமல் தியங்குதல்நீ அறியாயோ*
*பைகுலவு பாம்பணைமேற் படுத்திருப்போன் மருகோனே*
*மைகுடிக்கும் கடற்புதுவை மணற்குளவி நாயகனே* 2

*முன்னமென்பால் நீயுரைத்த மொழியினது பயனுணர்ந்தும்*
*இன்னமும்நின் றிருவுள்ளம் இரங்காதற் கென்செய்வேன்*
1 *பன்னகத்தால் இறுக்குமெழிற் பண்டியுடைப் பெருமானே*
*மன்னர்புகழ் தென்புதுவை மணற்குளவி நாயகனே* 3

---

1) 1 தரும்நலம் சக்கராயுதம் தந்தது.
2 மதயானை. யானைக்கு மூன்று மதம் உண்டு. இங்கு கணபதியை யானையாகக் கொள்ளும்போது, கருணையே, பெருகியுள்ளதென்பதாம்.

2) 1 மேகம் கடல் நீரை உண்கின்ற.

3) 1 பாம்பு. கணபதியின் வயிற்றில் ஆதிசேடனைக் கச்சாக அணிந்திருப்பதாம்—பண்டி—வயிறு.

1 தூய்மைஓர் சிறிதுமில்லாத் தொழில்கண்டு நளர்வேற்கும்
2 செய்மையார் உணர்வரிய திருவடிப்பூப் புனைவாயோ
தீமைசேர் 3 கயமுகனைச் செகுத்துயருந் திறவோனே
வாய்மையார் தரும்புதுவை மணற்குளவி நாயகனே 4

1 ஏடலர்பூங் கொன்றையுளான் இறைஞ்சு நலம் தெரிந்தந்நாள்
2 ஆடகமால் வரையருகில் அவன் மகவும் ஆயிலையோ
3 கோடணியும் கரத்தானே கொடியவருக் கிரங்காதாய்
4 மாடமலி வுறும்புதுவை மணற்குளவி நாயகனே 5

கொண்டல்வண்ணப் பெருமானும் கோகனக மலரோனும்
பண்டடைந்த நலம்நாடிப் பரதவிப்ப தறியாயோ
தொண்டருடன் பகைசெய்வார் துகளாகச் சினங்கொள்வாய்
மண்டலத்தி லுயர்புதுவை மணற்குளவி விநாயகனே 6

1 பொன்பரவு பெருவாழ்வும் புலையாதி தவிர்வோராம்
அன்பர்களுக் கிதஞ்செய்யும் 2 அறிவும்எவர்க் கருள்வாயோ
மின்படுசிற்றிடையுடையாள் மிளிர்பாகத் தொருகளிறே
வன்பர்களும் புகழ்புதுவை மணற்குளவி நாயகனே 7

1 பொலம்பூத்த மாநதியைப் பொருநையுடன் உதவியதோர்
நலங்கேட்டுன் னருள்வேண்டும் நாயடியேற் கிரங்காயோ
கலங்காத 2 கமலனொடு கயமுகனைக் கனன்றழித்தாய்
மலங்காதார் வளர்புதுவை மணற்குளவி நாயகனே 8

மானவைற் குமரன்உளம் மகிழ்கூரத் தினைப்புனத்திற்
1 கூனல்இளம் பிறைக்கோட்டுக் குஞ்சரமாச் சென்றிலையோ
தானவரிற் கொடியோனும் 2 தழலரக்கன் றனைஉண்டாய்
வானவர்ஊர் நிகர்புதுவை மணற்குளவி நாயகனே 9

---

4) 1 பரிசுத்தம், (கொலையைக் குறிக்கும்) 2 தேவர்கள். 3 கயமுகாசுரன். அவன் ஆகுவாகனமாயிருக்கின்றான்.

5) 1 இதழ் விரிந்த கொன்றைமலர் சூடியவர்சிவன். 2 பொன்மலையானமேரு. 3 கொம்பு. 4 மாடிவீடுகள்

6) 1 கோகனகம்–தாமரை. இதிலிருப்பவன் பிரமன்.

7) பொன்–திருமகள்தரும் செல்வப்பொலிவு. 2 புலை கொலையுற்றவரிடத்து அன்புசெய்தல். எனவே. அதையுடையார்பால்அதை அவர் மாற்றும்படி வன்மையாகத் திருத்துதல் குறிப்பு.

8) 1 பொன்பொருந்திய நதி காவிரி. பொருநை தாமிரபரணியாறு. இவ்விருநதிகளும் கணபதியால் உண்டானவை 2. கமலாசுரன்.

9) 1 வளைவானகொம்பு 2. அனலாசுரன். இவனை உண்டதாக வரலாறு.

1 வெட்டுற்ற மரந்தழையை விளம்புதமிழ் உடையானைத்
தொட்டுநெடுங் கயிலையின்மேற் றுலங்கிடவைத் தருளிலையோ
குட்டுத்தலை யுள்ளார்தம் குறை தவிர்க்கும் குஞ்சரமே
மட்டுலவும் பொழிற்புதுவை மணற்குளவி நாயகனே 10

1 காவிமலர்க் கள்ஒழுகக் கயலருந்திக் களிகூறும்
வாவிமிகுந் திருப்புதுவை மணற்குளவி நாயகனைத்
தாவில்புக ழுறும்நெல்லைத் தமிழ்ப்புலவன் பகர்பாடல்
மேவியநெஞ் சுடையாரை வினையிரண்டும் அணுகாவே 11

தெய்வமே துணை

---

10) 1 வேடர்களான அண்ணன் தம்பியர்களிடமிருந்த பலாமரமும், முப்பந்தலென்ற இடத்தில் மணப்பந்தலுக்காக வெட்டப்பட்டிருந்த பனை மரத்துண்டும், உயிர் பெற்றுத் தழைத்துப் பழம் உடனே விழச்செய்தவள் ஔவையார் கூழைப் பலாத் தழைக்க எனவும், ''திங்கட்குடையுடை'' எனவும் வரும் பாடல்கள் அவை-

11) 1 குவளைமலர்கள் தேனை வடிக்க-அதை மீன்கள் உண்டு மகிழும் என்பதாம். மீனும்கூடத் தேனையுண்ணும் என்று சிறப்பித்தார்கள். தேன் மது அல்ல. இதனால் மக்களாவர் நல்லுணவே கொள்வார் என்பது கருத்து.



# முருகன் பதிகம் 1.

## காப்பு வெண்பா

1 கொங்காருந் தென்றற் குழவி விளையாடும்
மங்காத சீர்ப்புதுவை வாழ்குகன்மேல்—நங்காதற்
செந்தமிழால் ஓர்பதிகம் செப்புதற்குச் சேவலொடு
சுந்தரப்பொற் றேகை துணை

## அறுசீர்க்கழி நெடில்

சிவமெனும் பொருளும் சத்தியும் ஒன்றாய்ச்
சேர்ந்ததிற் றிருவுரு வாய
பவளமால் வரைநேர் உனைமயிற் பரிமேற்
படிறனேன் பார்க்கும்நாள் உளதோ
தவறிலா நடையே ராகிய பெருமைத்
தமிழ்க்கவு மாரர்தம் தவமே
குவலய முழுதும் புகழ்தரத் திகழ்சீர்
குலவுதென் புதுவையூர்க் குகனே 1

மறியறுத் திறைஞ்சல் நலமெனப் பகர்வார்
மகிழவும் புரிந்தனை ஆயின்
நெறியெலாம் உனதென் றுணர்ந்துயிர் முழுதும்
நீயெனக் கருதல்வீண் போமோ
பொறிமயிற் பரிமேற் பவனிவந் தருளும்
புனிதனே போற்றுவார் மகிழக்
குறிபகர் குறத்தி கணவனும் முருகா
குலவுதென் புதுவையூர்க் குகனே 2

செற்றமிக் குடையார் குலமறக் கனையும்
திருக்கைவேற் படைநலங் கருதாப்
பற்றலர் நடுங்கத் திரியுமாண் பளித்துன்
பதம்பெறப் புரியும்நாள் உளதோ
கொற்றவெண் சேவற் கொடிதிகழ் கரத்தாய்
குறிச்சிதோ றுடிய குருந்தே
குற்றமுங் குணமா மெனக்கொளுங் குமரா
குலவுதென் புதுவையூர்க் குகனே 3

தவ்வைசேர் முகத்துச் சமயர்வீ றழித்துத்
தவளநீ றுதிய புனைந்து

செவ்வையா ருனது முகங்களைப் புகழ்வார்
சிறப்புறக் காண்பவன் எவனோ
கவ்வைதீர்த் தருளுங் கருணையங் கடலே
கனகமா நகர்ப்பிடி கணவா
கொவ்வைவாய் அணங்கார் நடம்புரி கோயில்
குலவுதென் புதுவையூர்க் குகனே 4

பல்வகை உருக்கொண் டடியனேன் கனவிற்
பகர்ந்தவா றனைத்து(ம்)மெய் யானுல்
சொல்வதற் கமையாச் சுகம்பெறக் கொடுத்துன்
தொழும்பரோ டுவப்புறப் புரிவாய்
கல்வரைக் குறிஞ்சித் தலைவனே பொதியைக்
கடவுள்மா முனிக்கருள் கையாய்
கொல்வது கருதார்க் கினியவே தியனே
குலவுதென் புதுவையூர்க் குகனே 5

அங்கிவெற் பதன்பால் நிகழ்ந்தமை யுரைத்தும்
அலமருந் தமியனேற் கிரங்கி
இங்கிருப் பவர்கண் டுவப்புறத் தகுமாண்(பு)
இயற்றிடுந் திறலளித் தருள்வாய்
பைங்கிளி யிருந்த புயத்தனே! அடியார்
பகையொழித் தியங்கும்வேற் படையாய்
கொங்கிசைந் தலர்ந்த கடப்பமா லிகையாய்
குலவுதென் புதுவையூர்க் குகனே 6

கடல்முதற் பகரும் புனலுட னெழும்நாக்
கனலினும் கிடக்கும்என் தமிழை
அடலுறும் திரள்தோட் கணியுமுன் தனிவீ(டு)
அளிப்பினும் பொருந்திடேன் கண்டாய்
விடன்முனுள் எறிந்த வெற்றிலைக் காம்பே
வேலெனத் திகழ்தர விதித்தாய்
குடவளை முழங்கி அலைதருந் தனிச்சீர்
குலவுதென் புதுவையூர்க் குகனே 7

காழியம் பதியிற் கவுணியன் அனையா
கவிஞுற் களையனுர்த் தொலைந்து
கூழினிற் றிகழ்வார் மகிழ்வுறும் ஒருநாள்
குவலயத் தொளிர்தரப் புரிவாய்
வாழியென் றிரப்போர் விருப்பெலாம் கொடுக்கும்
வரதனே வானுளோர் வழுத்தும்
கோழியொன் றெழுதும் கொடியுடைப் பரனே
குலவுதென் புதுவையூர்க் குகனே 8

ஆரணி சடையான் வரத்தினுற் களிப்புற்(று
அமரரைத் துயர்செய்தோன் ஆன
சூரனைக் தடிந்த பெருமைமுற் றுணர்வாய்
தொழத்தகும் கடவுள்வே றுளதோ
காரண மெனஓர் கனவில்முக் காலும்
கழறிய கந்தனே கதம்சேர்
கூரவேல் பிடித்த குமரநா யகனே
குலவுதென் புதுவையூர்க் குகனே 9

கமலநான் முகனும் கண்ணனும், கயிலைக்
கடவுளும் துதிசெயக் கமழ்ந்த
விமலநாண் மலர்த்தாள் இரண்டும்என் தலைமேல்
மிளிர்வதே அனுதினம் விழைந்தேன்
சமரசா னந்தத் திருவருட் பெருக்காம்
சரவணத் தடத்திடை தவழும்
குமரனே அடியார் குறையெலாம் பொறுப்பாய்
குலவுதென் புதுவையூர்க் குகனே 10

பரவலே பணியா மெனக்கொளுங் தமியேன்
பரதவித் துழல்வுறு திரங்கிச்
சரவணத் தடம்பூந் தாமரை யதன்மேல்
தவழ்ந்தசீர் காட்டிடில் தகுமே
கரவகன் றுயர்சீர்ச் சமயம்ஓராறும்
கவின்முக மாமெனப் படைத்தாய்
குரவர்யா வருந்தன் மயமெனத் தெரித்தாய்
குலவுதென் புதுவையூர்க் குகனே 11

கொதிதிரைத் தெண்ணீர்க் கடலொலி மிகுஞ்சீர்
குலவுதென் புதுவையூர்க் குகன்மேல்
நிதியர சனையார் மலிவுற விளங்கும்
நெல்லையூர்ப் பாவலன் நிகழ்த்தும்
பதிகமே பரவுந் தன்மையோர் எவரும்
பார்முழு தாள்பவர் தமக்கும்
விதி, மதன், சமன்என் றுறைக்குமூ வருக்கும்
வெருளுரு விறல்படைப் பவரே. 12



முருகக்கடவுள் துணை

# முருகப்பெருமான் பதிகம் 2.

## காப்பு வெண்பா

*உன்னையுன் அன்றுவட லூராணைச் செய்ததுபோல்*
*என்னைச் செயநீ இசையாதே-புன்னைப்*
*பொழிலாரும் நெய்தற் புதுவா புரியில்*
*விழிமூவா றுற்றதெய் வமே.*

*ஆதவரை அணையமணி முடிகள் ஆறும்*
*அவிர்மதிகள் போலும்வத னங்கள் ஆறும்*
*ஏதமில்பன் னிருந்தோளும் பதுமப் பூந்தாள்*
*இரண்டும்மயி லொடுவேலும் இலங்க வந்(து)ஆள்*
*மாதவன்கண் மணியனையார் இருவர் பாகா!*
*மாதேவன் விழியிலந்நாள் வந்த பாலா!*
*மூதறிஞர் மலிதருதென் புதுவை யூரில்*
*மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே.* 1

*அத்தனைகூத் தென்னிமித்தம் புரிந்த நீயின்(று)*
*அறியாதார் போலிருப்ப(து) அறமன் றுண்மைப்*
*பத்தரொடு கூட்டுதற்காம் ஆட லொன்றுஇப்*
*படியினரும் அறியும்வண்ணம் பரிந்து செய்வாய்*
*சத்தமறைக் கிழவனைமுன் புடைத்த செங்கைத்*
*தனிப்புலவா திருஞானத் தந்தி ஊர்வாய்*
*முத்தமிழ்ப்பா வலர்புகழ்சீர்ப் புதுவை யூரில்*
*மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே* 2

*தெம்புறுபுன் னெறிமுழுதும் அடங்க வென்று*
*திருவருட்பே ராடல்மிகச் செய்கை வேண்டி*
*நம்புமென்னை ஏடனைப்பேய் வசத்திற் சேர்த்து*
*நடிவுறக்காண் பதுமுறையோ ஞானம் ஈந்(து)ஆள்*
*கொம்புதிரு கியதகர்மா உகைக்க வல்லாய்*
*கொடுங்கோபச் சேவலம்புட் கொடிகைக் கொண்டாய்*
*மொய்ம்புடையார் பலர்வாழும் புதுவை யூரில்*
*மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே.* 3

கண்டனைய தமிழ்ப்பாடல் அனந்தம் முன்னாள்
கனலினொடு புனலில்இடக் கருத்தஞ் சாத
வண்டனென எனையிகழா(து) அவற்றையெல்லாம்
வழங்கியினி தாண்டருளும் வலியில் லாயோ
குண்டலம்ஆ டியசெவிஆ றிரண்டுள் ளானே
குறிச்சிதொறும் நடம்பயிலும் கொற்றத் தெந்தாய்
முண்டகப்பூ வாவிமலி புதுவை யூரில்
மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே 4

கத்துபுனற் கடல்சூழும் உலகிற் செஞ்சொற்
கவிச்சுவைதேர்ந் துவப்படையாக் கயவர் தம்பால்
உய்த்துவருத் திடுங்கொடுமை தவிர்ந்தென் வேட்கை
உதவுதற்கோர் சிறிதுளத்தில் உன்னுெண் ணுதோ
நத்துமெழிற் கயலினமும் கரும்பும் நெல்லும்
நளினமும்பல் கடைசியர்வெண் ணகைபோற் காணும்
முத்து(உ)குக்கும் தண்பணைசூழ் புதுவை யூரில்
மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே 5

வைம்மலிவேல் அனையஉண்கட் பரவை கேள்வன்
மகிழ்கூர வேண்டல்முற்றும் வழங்கி ஆண்டோன்
மெய்ம்மகனுன் றுன்னைமிக நம்பும் என்னை
மிடிக்கனலால் வெதுப்புகின்ற விதமென் கொல்லோ
கைம்மலர்முந் நான்குடைய கந்தா! செந்தாட்
கருங்குறத்தி மணவாளா கார்சற் றேவா
மொய்ம்மலர்ப்பைம் பொழில்உகுக்கும் புதுவை யூரில்
மூவாறு விழிகொடுவாழ் முருகவேளே 6

நந்துறுகைக் கருமுகில்போற் புவியில் வாழ்ந்து
நரைவிடையான் எனவானில் நணுக வேண்டி
நொந்துறுமென் றனைப்பலவா வருத்து கின்றாய்
நுவன்றுளநின் திருமொழிகள் நூறும் பொய்யோ
இந்துறுசெஞ் சடைக்களிற்றுக் கிளைய பாலா
இமயவரைப் பிடிகரத்தில் என்றும் நீங்காய்
முந்துறும்நான் மறைமுழங்கும் புதுவை யூரில்
மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே 7

நற்பசுஞ்சா ணங்கொடுசெய் துளவெண் ணீற்றை
நகைத்திகழ்ந்தார் கழுமரத்தால் நலிந்த வாறு
கற்பனையென் பதற்கான கொடுமை கண்டும்
கலங்குமெனக் கிரங்காமை கருணைப் பாங்கோ
சொற்பனுவற் கவுணியச்சேய் எனவும் வந்தாய்
துதிப்பதே தொழிலாய தொழும்பர்க் கெல்லாம்
முற்பவமும் உணர்த்துமெந்தாய் புதுவை யூரில்
மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே. 8

அழிவதும்வச் சிரதேகம் பெற்றுளேம் என்(று)
அகங்கரித்துப் பொருஞ்சூர்மா அழியத் தாக்கிக்
கழிவருமேம் பாடுறும்நின் திருக்கை வேலே
கருதுமெனக் கொருசிறிது கருணை செய்வாய்
ஒழிவரும்பே ரகண்டமென் கின்றார்க்கும் ஏனல்
உடையானைப் பணிவான்என் றுரைக்கின் றார்க்கும்
மொழிவரும்பே றளிக்கவல்லாய் புதுவை யூரில்
மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே 9

பாவளமிக் களித்தருளும் பெருமை யெல்லாம்
பழுதுபடத் துயர்விளைத்தாய், பாவம் அந்தோ
நீவலியத் தடுத்தாண்டும் இந்தவாறு
நெடுநீர்ப்பா ரிடைவருத்தல் நீதி தானோ
தேவர்கள்தம் பெருஞ்சேனைத் தலைவா, விண்ணோர்ச்
சிந்துரத்தின் மகள்புணரும் சிறுவா என்று
மூவர்பர விடக்களிப்பாய் புதுவை யூரில்
மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே. 10

ஆக்கமும் கீர்த் தியும்பொருளா மதிக்கின் றார்போன்(று)
அலமந்தேன் நின்னருளே அனைத்தும் ஆமென்(று)
ஊக்கமுடன் உணர்ந்தவுண்மை மறையா வண்ணம்
ஒருவிளையாட் டென்னிமித்தம் உளுற்றெண் ணுதோ
தரக்கழற்கட் சிவபெருமான், பொதியை நாதன்,
தமிழருணைப் புலவன், அன்னார் தமக்கெந் நாளும்
மோக்கம் நுவல் குரவாதென் புதுவை யூரில்
மூவாறு விழிகொடுவாழ் முருக வேளே 11

இருக்குமுத லாயமறை அனந்தம் போற்றும்
இறையவனைத் துதிபுரிவார்க் கொளியான் றன்னை
முருக்கிதழார் ஆடல்மலி புதுவை யூரில்
மூவாறு விழிகொடுவாழ் முருக வேளைத்
திருக்கைவேற் படைப்பூசை ஆசையொன்றும்
தீராதகவுமார திலகன்போற்றல்
மருக்கமழ்பூஞ் செச்சை யொக்கும்எனக் கொண்டேத்தும்
வாயுடையார் விரும்புகின்ற வாழ்வுண்டாமே. 12



# முருகப்பெருமான் பதிகம் 3.

### காப்பு வெண்பா

*போதவளம் ஓங்கும் புதுவா புரிபுரக்கும்*
*வேதவன நாதர்தந்த வேலவனைக்-காதலுடன்*
*பாடிக் கருதும் பரிசுபெறப் பச்சறுகும்*
*சூடிக்கொள் வேழம் துணை*

## இரட்டை ஆசிரிய மகுட விருத்தங்கள்

### முருகன் திருவுருவச் சிறப்பு

*செங்கதிர் விரித்திலகு மணிமுடிகள் ஆறும்,*
*செழும்குமுத மும்கு வளையும்*
*திகழ்தவள முகையும்,எள் ளிளமலரும் உற்றனைய*
*திருமுகக் கமலம் ஆறும்*
*துங்கமுறு வச்சிரம் சூலமுத லாயபடை*
*துன்னுபன் னிருதோள் களும்,*
*சுரவனிதை மறவனிதை முலைதரு தழும்பொடு*
*துணர்க்கடம் பொளிர்மார் பமும்,*
*தங்கமய மானசெம் பட்டுடையும், நவமணித்*
*தண்மைகிண் கிணிபு லம்பச்*
*சதுமறையின் முடிவில்நடம் இடுசரண யுகளமும்*
*தருசேவை பெறுவ தென்றோ*
*புங்கமிகு தானவப் படைநடு நடுங்கவிடு*
*போர்வே லணிந்த குமரா*
*புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச*
*புதுவைநிகர் முருகே சனே.*

### சிறுமைகூறித் திருவருள் வேண்டல்

*மின்பூத்த சிற்றிடைச் சிறுமியர் மோகத்தில்*
*விளைகின்ற துன்ப நோயும்,*
*விடமதனி லுங்கொடிய பொருள்உழைத் தலைகின்ற*
*வேட்கையில் மெலிந்த மெலிவும்*
*தென்பூத்த வாரிதி யுடுத்தபுவி யாசையும்,*
*சேரப்பெ ருத்த பகையும்,*
*சிறிதேனும் அணுகாதுன் ஆறெழுத் தோதி,நின்*
*திருவடித் துணை களுக்குச்*

கொன்பூத்த பன்மலர் அருச்சித்து வழிபடும்
கொள்கையை அளித்து வல்லோர்
குழுவொடு திரிந்தினிப் பிறவாத முத்தியிற்
கூடிடவி பூதி யருள்வாய்!
பொன்பூத்த பைங்கடம் பலரும்அகல் மார்பினிற்
போர்வே லணிந்த குமரா
புகலரிய பிரகாச! விபுதர்பரவியநேச!
புதுவைநகர் முருகேசனே. 2

## தன் அநுபவம் உரைத்தல்

பத்தியில் அமிழ்ந்துனது பணிகளில் முயன்றன்பர்
பண்பினில் விருப்பமாகிப்
பாதாதிகேசமட்(டு) உத்தூள மாகிப்
பரந்தவெண் ணீறு காவி
முத்திரைமு தற்சில பொருந்திக், கடற்பருகு
முனிவன்முந் நாள்ப யந்த
முத்தமிழ்ச் சுவைகண்(டு) எழுத்தாறும் ஓதி, நின்
முண்டகத் தாள்நி னைத்துச்
சித்திகள் இயற்றற் குறித்துத் தவித்துத்
தினந்தோறும் வாடும் என்னைச்
சிற்றெறும் பினும்எளியன் என்றிகழும் அவரிடம்
சென்றிரந் துழல விடல்ஏன்?
புத்திரனெனப் பரமன் நெற்றிவிழி வழிவந்து
போர்வேல ணிந்த குமரா.
புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச
புதுவைநகர் முருகேசனே 3

## கடவுள் நிலையும் காணவேண்டலும்

ஆனதி யாகும்ஒரு! மூவகையு மாகிநின்(று)
அளவற்ற விளையாடல் செய்(து)
அருவவா திகள்உருவ வாதிகள்எ னப்பகரும்
அவ்விருவ ருக்கும் நடுவாய்க்,
காணாத தென்பவர்க் கவ்வண்ண மேதனைக்
காட்டா தொளித் திருந்து,
கண்டுதொழ வல்லதென நம்புமவ ருக்கருட்
காட்சிதரு கடவுள்; எனலால்,
சேனடர் வழிபாடு செய்தொரு தடத்தினில்
திருவுருக் கண்ட படியே
சிறியேனும் உய்யக் குறித்துநின் றேன்; இதுதன்
திருவுள்ளம் அறியாததோ

பூணுமெனப்பணிய ணிந்தவன் தரவந்து
போர்வே லணிந்த குமரா.
புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச!
புதுவை நகர் முருகேசனே

கற்பகத் தருநிழற் புலவர்புணர் தருமகளிர்
கலவிநல மெனவி ழைந்து
காதுதல்செய் தீமக முடிப் பவர் விளம்புபல
கதைகட் க்ரங்கிடாமல்
பற்பல சகத்திரப் பகுதிபெறு சமயப்
பாப்பிடை மருண்டி டாமல்
பாமாலை சூடிவினை வழிபடுமெ யடியரொடு
பழகிப் பணிந்து முன்னாள்
சொற்பனத் தென்மனமும் அறியஉன் னருள்வந்து
சொன்னதைத் தினமும் நாடிச்
சுகசொருப மாகிஅரு ளானந்த வாரியிற்
றோய்வுறப் புரிவ தென்றோ
பொற்பதும மகள்கணவ னும்புகழ் பெருந்திறற்
போர்வே லணிந்த குமரா
புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச,
புதுவை நகர் முருகேசனே.

## வேண்டலின் விநோதம்

(பணமில்லையானால் நோட்டாக்கொடு என்பதுபோல)

காமனுக் கஞ்சித் தவிக்கின்ற என்னை நின்
கருணைவிழி கொண்டு பார்த்துக்,
கவிகோடி பாடப் பணித்தடியர் தம்மொடு
கலந்து வாழப் புரிந்து
பாமரரும் இகழாது புகழும் பெருந்தகை
படைத்துமகிழ் கூரவைத்துப்
பலவகைப் பிறவியிற் செல்லாத வீடுறும்
படிசெய்ய வல்லை யாகில்,
சாமளவி நோதக் கலாபமயில் மீதில்இரு
தையலா ரோடும் வந்து
சங்கரனு டன்குறுமு னிக்கும்உ த வியபொருள்
தனைக்கொடுத் தருள்ஐயனே
பூமனைக் குட்டியமு ழுப்புலவ னேநெடும
போர்வே லணிந்த குமரா
புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச
புதுவை நகர் முருகேசனே.

கோழியெழு தியநெடுங் கேதனத் தைத்தினங்
கும்பிடும் தவசி கட்கும்,
குன்றுதொறும் ஏகிச் செழுந்தமிழ்க் கவிபல
கொழிக்கின்ற புலவ ருக்கும்,
பாழியந் தோள்கொண்டும் உயிர்வதைக் கஞ்சாத
பரசமைய முழுதும் வெல்லும்
பான்மையுறு கவுமார முதல்வர்க்கும்,
பணிபுரியும் அடிமையாகி
வீழியின் கனியிதழ்ச் சிறுமியர்த ருங்கொடிய
விரகவெப் பந்தணிந்த
மெய்ஞான வாரிதியின் மூழ்கிக் குறித்துனை
மெச்சுவ தறிந்தி லாயோ
பூழிய னெனச்சென்று பொன்வரையை வென்றடற்
போர்வே லணிந்த குமரா
புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச
புதுவைநகர் முருகேசனே.

## திருவருள் வேண்டல்

பண்பாடும் வண்டுமலி பைந்துணர்க் குழல்மகளிர்
பனிமொழிச் சுவைவி ரும்பிப்
பம்பரமெ னக்குலவு கொங்கைகண் டுள்ளம்
பதைத்துருகு பாவி யேனைத்
திண்பார், நெடுங்கடலில் வீழாத வண்ணமுன்
தென்றிசையில் வந்த முனிவன்
செப்பிய தமிழ்க்கடலி டத்திற் குளித்துனது
சேவடிக ளைக்குறித்து
நண்பாள ருக்கினிய எல்லாம் இயற்றிஅருள்
நலமறிகி லார்தமக்கோர்
நமனென விளங்கிடச் செயும்இலை விபூதியினை
நல்கிஅருள் புரிவதென்றோ
புண்பா டொழிந்தன்பர் உய்யவரு புலவனே
போர்வேல ணிந்தகுமரா
புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச,
புதுவைநகர் முருகேசனே.

## உரிமைகூறி உயரருள் விழைதல்

வானவரும் வெண்திரைப் பாற்கடல்அ ளிக்கவரு
மகளிரும் அழப்ப டுத்தி
மாதவர் நடுங்கும் கொடுங்கோல் நடாத்துமொரு
வல்லவுண னை மாவைத்

தானவயப் படையொடு செகுத்திந் திரன்றனைத்
தருநிழற் கீழமைத்த
சண்முகக் கடவுளுக் கடிமைநான் என்றும்
சகத்தோ ரிடத்தி ரந்து
மானமில் லாதவர்கள் போலத்தி ரிந்த(து)இம்
மட்டுமே போதும்; மயில்மேல்
வந்தருள் புரிந்துனது தொண்டரொடு கூட்டியருள்
வள்ளிமின் னுள் அளித்த
போனகம்அ ருந்தஒரு கிழமுனிவ னைவா
போர்வேல ணிந்த குமரா.
புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச
புதுவைநகர் முருகேசனே. 9

## முருகன் தெரிசனம் வேண்டல்

கரவுமிகும் நெஞ்சுடைக் கயவர்மனை முன்றிலிற்
கைவிரித் தேற்று நொந்து
கண்கலுழ்தல் அறஎனது மனவெளியில் வந்துபல
கழறியவை பொய்த்தி டாமல்
மரகத கலாபமயில் வாகனத் திற்புலவர்
வனிதையொடு குறவர் தந்த
மகளும்இரு பாலுறச் செயசெய எனத்தொண்டர்
வனைதரத் தோன்றி நின்று
சரவணப வாய,முரு காயவென நானிடும்
தண்மலர்ப் பூசை கொண்டு
சருவபிர சாதம்ப டைத்து மகிழ் கவுமாரர்
தம்மோடி ருக்க வைப்பாய்
புரதகனன், அரி, பிரமர் முதலியவ ரும்பரவு
போர்வேல னிந்தகுமரா
புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச
புதுவைநகர் முருகேசனே. 10

## தவநிலை விரும்புதல்

பருவமுற் றியமகளிர் நகைகண்டுள் உருகிப்
பதைக்கின்ற தன்மை அற்றுன்
பாதபங் கயம்நினைத் தன்பரொடு கூடிப்
பழிக்கரிய தவமு யன்று
கெருவமற் றுனந்த வெள்ளத்தில் மூழ்கிக்
கிளத்தரிய மோனி யாகிக்

கீழவர்க் கெய்தாத வீடுபெறு மாறருள்
கிடைத்திடும் தினமும் உளதோ
சருவசத் துருநாச கெம்பீர உத்தண்ட
சரவணோற் பவவி சாகா!
தவளநிற வாரணக் கொடியுடைக் குரவா
தகர்ப்பரி உகைத்த வீரா
புருவமத்தி தியில்நடன மிடுமுதற் கடவுளே
போர்வே லனிந்த குமரா.
புகலரிய பிரகாச விபுதர்பர வியநேச
புதுவைநகர் முருகேசனே 11

## அநுபவம்பெற்ற விவரம்

என்னது மனத்தகத் தளவற்ற விளையாடல்
இட்டதுவு மன்றி உலகோர்
இவனொரு திருப்புகழ்க் காரன், என ஓதவும்
இயற்றினை, இதன்றி ஒருநாள்
பன்னரிய வளமருவு செந்திலம் பதியிலொரு
பரமரக சியமுணர்ந்த்திப்
பழுதறுத் தனை, முழுப் பாமரர்க் குயிரனைய
பைம்பொன்விழை யாமை அருள்வாய்
கன்னல்வரி வில்லுடைய காளைமனம் நாணுறும்
கவினுடைக் கந்த வேளே
கடம்ஒழுகு திருஞான வேழத்தின் மீதுவரு
காரணக் குருநாதனே
பொன்னகரி வாழவென மின்னல்நிக ராகுமொரு
போர்வே லணிந்த குமரா
புகலரிய பிரகாச விபுதர் பரவியநேச
புதுவைநகர் முருகேசனே. 12

உ

# கௌமார அந்தாதி

## காப்பு வெண்பா

மதுவைப் பொழிகடம்ப மாலைகமழ் மார்பன்
புதுவைப் பதிக்குமரப் புத்தேள்-பதுமலர்ச்
சேவடிக்கந் தாதியொன்று செப்பச் சிகிப்பரியும்
தூவடிவே லொன்றுந் துணை.

## கட்டளைக் கலித்துறை

அருள்சேர் பரங்கிரி செந்தூர் பழனி அரனுணரும்
தெருள்சேர்தென் ஏரகம் சோலை மலைஎண்ணில் சீர்ச்சிகரி
பொருள்சேர்புதுவைக் குகன்படை வீடெனப் போற்றுமன்பர்
இருள்சேர் வினைப்பணி தீர்ந்துண்மை வீட்டினில் எய்துநரே 1

எய்தவிற் கானவர் பேதைக்கு மால்கொண் டிறைஞ்சித்தொண்டு
செய்தனை யென்று சிலரேரசக் கேட்டும்என் சிந்தையுனக்(கு)
உய்தம்வைத் தேத்திடற் கண்டும் இரக்கம் உறுதென்னோ
மைதவழ் சோலைப் புதுவா புரியில் வளர்கந்தனே. 2

வளங்காட்டும் தென்புது வாபுரிக் கோவிலில் வாழ்குகனைத்
களங்காட்டுந் தாமரைப் புத்தேளைக் குட்டிய சண்முகனை
இனங்காட்டு வள்ளிக் கிசைந்தோன் என்றேதும்
இயல்புணர்ந்தோர்
களங்காட்டும் நஞ்சுடை யரனன்ன மேன்மைக் கடவுளரே. 3

கடகரி மாமுகத் தைங்கரன் பின்வருங் காளை, நல்லோர்
இடர்களை யும்புது வாபுரிக் கோயிற் கிசைந்தசெவ்வேள்
அடலவு ணேசனைச் சொற்றத னால்உம்பர் ஆதியரும்
புடவியில் மானிடர் தாமும் பெருகிப் பொலிந்தனரே. 4

பொலியுந் தவளத் திருநீற்றுத் தொண்டரைப் போற்றுபன்பர்
மலியும் புதுவைப் பதிக்கந் தனேஉன்னை வாழ்த்துமென்னைக்
கலியுங் கருமமும் என்செய லாம்?எனக் கண்டபின்னும்
மெலியுங் கொடுமையை யாரோடிந் நாளில் விளம்புவதே 5

விளங்கனிக் கொங்கைநல் லார்மையல் நோயில் வெதும்புமனக்
களங்கமெல் லாந்தவிர்ந் தன்பரிற் சேரக் கருணைசெய்வாய்
இளங்கமு காமிடற் றூர்நட மாடும் எழிற்புதுவை
வளங்கரு திப்புகழ் வாரெதிர் தோன்று(ம்) மயூரத்தனே. 6

ஊரும் களிறிருக் கத்தக ரேறி உலவும்பிரான்
நீருண்ட கார்முன் நடமாடுந் தோகை நெடுமயிலோன்
பாருங் ககனமும் போற்றும் புதுவைப் பதியில்வந்து
சேரும் படிதவம் செய்தோன் முன் னோரிற் சிறந்தவனே 7

சிறந்தவெள் ளானைப் பிடரேறித் தொண்டர்முற் சென்றினிமேல்
பிறந்தய ராச்செல்வம் நல்கும் புதுவைப் பிரான்குறத்தி
கறந்தவெண்பால்நிகர்சொற்கேட் டுருகும் கடவுளன்றி
இறந்தழி யாத்தெய்வம் இல்லையென் பாரும் இகததில்உண்டே. 8

உண்டுண் டுறங்குத லேதொழி லாகி, உளம்களிக்கும்
திண்டுமிண் டாளர்தம் பாற்றின மேகித் திரிந்துழன்றேன்
கண்டுன் கருணைக் கடலாடச் செய்தருள் கானகத்து
வண்டுண்ட நீபப் புயனே புதுவையில் வாழ்ஐயனே. 9

வாழையும் தென்னை மரமும் கமுகும்நன் மாவும், நறுந்
தாழையும் பூத்த புதுவா புரியிற் சரவணனைப்
பேழையொப் பாம்வயிற் றானுடன் தோன்றும் பிரானைநம்பி
ஊழைவென் றானந்த வீடுபெற் றார்நல்ல உத்தமரே. 10

உத்தமர் போலும் திருவேடம் காட்டி உலகிலுள்ளார்
கைத்தனம் கொள்ளும் தமியேற்கு. நின்கடைக் கண்ணருள
வைத்தடி யார்தம் முடன்சேரச் செய்வைகொல்? வண்மைமிகு
முத்தமிழ்த் தேசிக னேபுது வாபுரி முன்னவனே 11

முன்னாள் எனக்குன் அருள்வந்து சொன்ன மொழிகளெல்லாம்
என்னகம் சோர்வுறச் செய்கின்ற தன்றி, நல்இன்பம்நல்கி
நன்னுவ லோர்புகழ் சீர்காட்ட வில்லை,எந் நாட்செய்யுமோ
பொன்னெடு நேர்புது வாபுரி வாழ்அயிற் புங்கவனே 12

புங்கவர் போற்றும் புதுவைக் குகனைப் புரமெரித்த
சங்கரன் நெற்றியங் கண்ணா றுதித்துயர் சண்முகனைக்
கொங்கலர் தூற்றித் தொழுதேத்தும் உண்மைக்
குணம்பொருந்திற்
பங்கய வேதன் விதிநீங்கும் உண்மைப் பயனெய்துமே. 13

பயனொன்று மின்றிய பொய்ப்பொருள் வேட்கை படைத்துமின்னார்
கயலொன்று கண்வலை யால்மரு ளாதுன் கழல்பணிந்து
நயமிஞ்சு செந்தமிழ்ப் பாமாலை கோடி நவிலச்செய்வாய்
வயலின்கண் வாளைக் கயல்பாய் புதுவை மயிலப்பனே. 14

அப்பணி யுஞ்சடை யார்தந்த பாலனுக்(கு) ஆயிரம்பேர்
தப்பவை வேல்விடுத் தாற்குப் புதுவைச் சரவணற்கு
முப்பழச் சாறன்ன செந்தமிழ்ப் பாடல் மொழிபுலவர்
எப்பயன் வேண்டினும் எய்தும்என் றேதுவ தென்கொள்கையே.
15

கொள்ளாப் பெருநலம் காட்டும் புதுவைக் குருபரனைத்
தள்ளாடும் வேதியர் போற்புனத் தேகித் தமிழ்க்குறத்திக்(கு)
உள்ளான காமுக னைச்செழுந் தேனுண்டு (உ)ழும் அறுகால்
புள்ளாடும் நீபப் புயத்தோனைத் தாழ்கிலர் பொல்லவரே. 16

பொல்லார் மனைக்கடை வாசல்கள் தோறும் புகுந்திரந்து
நில்லாமல் உன்னடி யார்க்குள மேன்மையை நீகொடுப்பாய்
கல்லால நீழற் பெருமான்றன் நெற்றியங் கண்மணியே
நல்லார்க் கினிய குகனே புதுவை நகர்க் கந்தனே. 17

கந்தக் கடம்ப மலர்மாலைத் தோளைக் கருதிஎண்ணில்
சந்தக் கவிதொடுத் துன்றருளிற் சூடும் தவம்எளிதோ
மந்தக் கருத்தர் உணரா நீல மயிற்பரிமேல்
எந்தக் கணத்தும் புதுவா புரியில் இருப்பவனே. 18

இருப்பவல் உண்ணத் துணிந்தாங்கு லோப ரிடத்திரந்து
நெருப்பன்ன பாழ்மிடிச் சூடுண்டி டாதென்றும் நீயருள்வாய்
மருப்பது மத்தடம் சூழும் புதுவையில் வாழ்ந்தும், உள்ள
பருப்பதந் தோறும் விளையாடு கின்ற பரதெய்வமே 19

தெய்வப் புலமைத் திறலுணர்ந் தோரில் திகழும்வஞ்சர்
பொய்வக் கணைக்குள்ளம் அஞ்சுவ னோதென் புதுவைநகர்ச்
சைவக் கொழுந்தனை யான்,மயில் மீதயில் தாங்கிவந்து
நெய்வற் றிடாமலர்ச் சேவடி சூட்டிமுன் நின்றிடினே 20

நின்றிடுஞ் சிந்தையில் லார்தவ வேடமும் நீள்நிலத்திற்
கொன்றிரை உண்ணும் குணுங்கர்தம் ஆண்மையும் கூடிஎன்னைக்
கன்றிடச் செய்வ தறியாய்கொ லோ,கொடுங் காலனைமுன்
வென்றிடுந் தாளுடை யார்புது வாபுரி வேலவனே 21

வேலா புதுவை நகராதி பாமத வேளும் வெட்கும்
சீலாஎன் றேத்தித் தவம்புரி யாமல் சிறுமியர்மேல்
மாலாகி வாடுமென் பால்அன்று கூறிடும் வார்த்தையெல்லாம்
காலாயு தக்கொடி வாழ்வான்மெய் யாகக் கருணைசெய்யே 22

கருணைக் கடலின் அமுதாகும் உன்னைக் கருதும் என்னை
அருணைக் கிளியெனச் சொன்னதுண் டேல்என் தானை இந்தத்
தருணத்தில் வேண்டிய வாறருள்வாய்! பெருந் தண்புதுவை
வருணக் கிரண மலிதோகைத் துங்க மயிற்குகனே 23

மயிலேறித் தன்னரு கேயிரு மாதர் வயங்கவெற்றி
அயிலேந்தி யென்முன் வருவதென் றோநல் அறம்வளர்த்த
குயிலே யனைய உமையாள்மைந் தாமுகிற் கூட்டம் அரு
எயிலேய்ந்த தென்புது வாபுரி காக்கும் எழிற்கந்தனே 24

எழிலார் வதனங்கள் ஆறும்திண் டோன்பன் னிரண்டும் அன்பர்
பழியாவுந் தீர்க்கும் திருத்தா ளிரண்டும் பவளவெற்பின்
உழிதோய்ந்துற் றுலன்ன கண்காட்டி யாளற் குளமிரங்காய்
பொழிலோங்கும் தென்புது வாபுரி மேவிய புண்ணியனே 25

புண்ணிய மோங்கும் புதுவைக் குகனை புராந்தகன்றன்
கண்ணிடை தோன்றி அவுணேசன் வாழ்வுறக் காய்ந்தவனைத்
திண்ணிய பேரறி வுள்ளார் உணரும் சிவகுருவை
எண்ணிய நெஞ்சம் இருண்டால் இளப்பம் எனக்கில்லையே 26

எனக்கருட் பேறெய்து மோ இல்லை யோஎன் றிடையும்என்பால்
கனக்கவும் நல்குதும் என்றுரைத் தாய்,பின்பு காமுகர்போல்
மனக்குழப் பம்படச் செய்தாய் இதுவும் வழக்கங்கொலோ
சினக்குந் தகர்ப்பரி யாய்புது வாபுரிச் சேவகனே 27

சேவலங் கேதனம் வாழியென் றேத்திச் சிகி யிற்செவ்வேற்
காவல னுகக் கருதுகின் றோர்க்கும் கரத்திற்றண்டும்
மூவலில் வெண்பொடிச் சீரும் குறிக்கும் முனிவருக்கும்
ஆவன நல்கி யருள்வாய் புதுவை யமர்கந்தனே 28

அமரர்தம் சேனைக் கதிபா! அகிலத் தணிப்புதுவைக்
குமர குருபர னேயென்று போற்றும் குணத்தினர்தம்
தமரணை யார்தம் இடத்தேயும் கோரச் சமன்எதிர்த்துச்
சமரம்இ டானென்று கண்டுகொள் வார்க்கொரு தாழ்வில்லையே 29

தாழா விரகத் தழலால் வெதும்பித் தவமுழுதும்
பாழாகி மாய்ந்து நிரையமென் றேதும் படுகுழியில்
வீழாமல் உன்னடி யார்திருக் கூட்டத்தில் மேவவைப்பாய்
ஆழாழி ஓசை மலியும் புதுவை அறுமுகனே 30

அறுகாற்புள் ஆர்க்கும் கடம்பும் குரவும் அணிச்செச்சையும்
பெறுகாமர்த் தோளுடைச் செவ்வேள் புதுவைப் பிரான்அருளில்
தறுகாத நெஞ்சக மே!பொரு ளாசை தனைச்சுமந்து
மறுகாமெய் வாழ்வதிற் சார்வதொன் றேஎன்சொல் வம்பல்லவே 31

வம்பருக் கஞ்சி மருளாமல் உன்பொன் மலர்ப்பதத்தை
நம்பவல் லாரொடு கூட்டுகண் டாய்!துங்க நான்மறையும்
உம்பரும் போற்றும் புதுவா புரியில் உறையுமெழிற்
செம்பவ ளாசலம் நேர்கந்த னேஅருட் டேசிகனே 32

தேசிகர்க் கோர்அர சாம்குக வேளைச் செழும்பவளப்
பாசி யணியும் குறமாது கேள்வனைப் பச்சைமயில்
வாசி இவரும் பெருமானைத் தொண்டர்கள் வந்துபணிந்(து
ஆசி பகரும் புதுவா புரிமிக் கழகியதே. 33

அழகாருந் தோகைச் சிகியேறி வேலணிந் தன்பர்முற்போம்
குழகா! புதுவை நகர்க்காவலா!எனக் கூறுநர்பால்,
பழகாமற் பாவையர் சொற்கேட் டுருகும் படிறர்க்கெல்லாம்
கழவா என்று ரிற்சிறுர்கூவ நொந்துழல் கேடுண்டுமே. 34

கேடற்ற செல்வம் தரும்ஆ றெழுத்தும் கிளத்தும் அன்பர்
பாடற் குருகும் பெருமாள், புதுவைப் பதிக்குகவேள்,
ஆடற் குரிய மயிலேறும் சேவகன், அன்றியுள்ளம்
நாடற் கினிய வடிவார்ந்த தெய்வம் நமக்கில்லையே 35

நமனை அந் நாள்வென்ற தாள்உடை யார்க்குண்மை ஞானம் நல்கும்
குமரனைச் செல்வப் புதுவா புரியிற் குகனை விண்ணூர்க்
கமலமுற்று ஆனையி னுல்வளர்ந் தாள்புணர் காவலனைப்
பமரம ருமலர் தூற்றித் துதிசெயும் பண்புநன்றே 36

பண்பாடும் வண்டு மலிநீபம் போலும்என் பாடல்களில்
நண்பாகிச் சற்றருட் செய்யினல் லால்முன்பு நம்பிவந்த
வண்பா வலர்எண்ணி லார்க்கருட் பேறு வழங்கல்மெய்யோ
திண்பார் புகழ்புது வாபுரி மேவும் சிவகுருவே. 37

சிவனும் பொதியைக் குறுமா முனியும் தெரிந்த தைத் தந்(து
உவகைக் கடலில் முழுக்காட்டி ஆண்டருள், ஓதமுந்நீர்
பவளம் தரளம் சொரியும் புதுவைப் பதியில்கண்டார்
அவலத் துயரும் பிணியுந் தவிர்க்கும் அருட்குகனே. 38

அருளாண்மை வேண்டிப் பரதவித் துள்ளம் அழுங்குமென்மேல்
பொருளாசைப் பேயை விடலாகு மோ? இது புண்ணியமோ
தெருளாளர் மன்னும் புதுவா புரியிற் சிவன்மகனே
இருளாரு மேனித் திருமால் மகளிர்க் கினியவனே. 39

இனியசிற் றுண்டி மிகப்படைப் பார்தம் இகலறுக்கும்
தனிமத வேழ முகத்தா னுடன்வரும் சண்முகவேள்
பனிமலர்ச் சோலைப் புதுவைப் பதியிற் பரிந்தொருக்கால்
கனியிதழ் வாய்திறந்து, ஓர்திரு வார்த்தை கழறில்நன்றே 40

கழகப் புலவர் துயர்தீர அன்றெழிற் கான்முளையாய்
மழலைச் சுவைகமழ் வாய்திர வாதருள் வள்ளலெங்கோன்
பழமைப் புதுவைப் பதியில்வந் தான்தொழும் பத்தருக்குத்
தழலைப் பொருவு மிடிநோய் முழுதும் தவிர்ந்தனவே. 41

தவிசில்உற்று (ஓ)ர்குடைக் கீழ்உல கேழையும் தாங்கியிந்தப்
புவியினில் வாழ்கின்ற வாழ்வையும் பொய்யெனும் போதமுள்ளார்
குவிமுலைப் பேதையர் ஆடும் புதுவையங் கோயிற்செவ்வேள்
கவின்மிகுந் தாட்கணி யாந்தமிழ்ப் பாடல்கள் கற்றவரே. 42

கற்றவர் போலும் கயவருக் கஞ்சிக் கலங்குமென்னை
மற்றவர் தாமும் அறியும்நல் ஆடல் வயங்கவைப்பாய்
நற்றவர் வாழும் புதுவா புரிக்கந்த நாயகனே
பெற்றவர்க் கோர்பொருட் சீர்காட்டி ஆண்ட பெரியவனே 43

பெரியோர் பலர்க்கும் அரசாகித் தென்றற் பெருங்குவட்டில்
வரிஓடும் செம்புலித் தோல்உடுத் தோங்கிய மாமுனிவன்
கிரியோன் எனும்குக வேளிடத் தேயன்று கேட்டஒன்று
சரியோ அன் றோஎனச் சாற்றுர் புதுவைத் தலம்நல்லதே. 44

நல்லசொல் நூல்பல விற்கத் துணிந்திந்த நானிலத்தில்
எல்லவ ரோடும் விலைகூறி னேன், இன்னம் யானெனஓர்
வல்லவ னேற்றுப் பொருளீய வில்லைநின் மாட்டுவந்தேன்
கொல்லலில் லாதவர்போற்றும் புதுவைக் குமரப்பனே 45

குமரன் குருபரன் செவ்வேள் குகன்எனக் கூறுமன்பர்
தமரன்றி மற்றவரெல்லாம் பகைஞர்; சரணமலர்க்
கமலங்க ளால் விண்ணும் மண்ணும் அளந்த கடவுள்மெச்சச்
சமரஞ்செய் வேல்முரு காபுது வாபுரிச் சண்முகனே. 46

சண்பைப் பதியிற் கவுணிய னாகிச் சமணர்கொடும்
பண்பைத் தவிர்த்தது மெய்யாகில், பற்பல பத்தருள்ளும்
நண்பைப் புரியத் துணிவாயன் றோ,என்று நாடுகின்றேன்
ஒண்பைத் தறையில் உயரும் புதுவை உறைகந்தனே. 47

உறைவாட்கைச் சேவக ராம்நவ வீரர்க் கொருதுணைவன்
கறைவாய்த்த கண்டத் தினார்க்குப தேசம் கழறியசேய்
நறைவார்க்கும் பூம்பொழில் சூழ்புது வாபுரி நாதனன்றி
நிறைவாழ்க்கை யீகின்ற தெய்வமுண்டோ? இல்லை நிச்சயமே 48

சயந்தன் கனவிற் றிருமேனி காட்டி முன் சாற்றியவா(று)
உயர்ந்தபொற் கோபுர வீரம யேந்திரத் தோங்கவுணர்
பயந்தழத் தரக்கிய வேற்பெரு மானைப் பணிந்தும்உள்ளம்
கயங்குகின் றீர்புது வாபுரி யூரினைக் காண்மின்களே. 49

மின்களைக் கொண்டுசெய் தால்எனத் தோன்றிய வேற்குமரன்
தன்கழ லேகதி யென்றிருப் பேனைத் தழலனைய
வன்கணர் ஏச மிடிநோய் வளைந்து வருத்தலென்னே
இன்கவி சூடும் புதுவா புரியில் இருப்பவரே. 50

பவவேலை நீந்திக் கவுமார முத்தி படைப்பவர்போல்
தவவேட மிட்டுத் திரிகின்ற நானும் தனமுழைத்திங்(கு)
அவவே தனையுடை யார்மனை தோறும் அலைதல் நன்றோ
நவவே னுறும்புது வாபுரி வாழ்கந்த நாயகனே 51

நாயக மாதிப் பலகோடி தெய்வமும் நான்எனஎன்
பேயகத் தூடுரைத் தாய், வள்ளி பால்களைப் பெற்றவனே
தூயக ராசலத் தால்வளர்ந் தாள்புணர் தோட்குகனே
நீயக லாப்புது வாபுரி சேர்ந்தது நின்னருளே 52

நின்செய லேசெய லென்றடங் காதிந்த நீணிலத்தில்
என்செய லுஞ்சற் றுளதாகு மென்றெண்ணி யீடழிந்தேன்
தன்செய லால்மயற் பேயொட்டிச் சேவடி தந்தருள்வாய்
பொன்செயல் மாடப் புதுவா புரிவாழ் புகழ்கந்தனே 53

புகழாயிரம் பெறுந் தென்புது வாபுரிப் புண்ணியவேள்
இகழா நலந்தரும் வேல்முரு கோன்,என் இதயத்துள்ளே
திகழார்வம் ஒவ்வொருக் கால்விளைந் தாங்கெதிர்ச் சேவைபெற்றால்
அகழாழி சூழும் உலகோர்க் கெல்லாமெய்தும் ஆனந்தமே. 54

ஆனந்த வாரிதிக் கப்பால் விளங்கும் அருட்குகவேள்
ஈனந் தவிர்த்தெம்மை ஆள்வான் புதுவை யிடத்தில் வந்து
நானந்த மூர்த்தியைப் போற்றுமல் வஞ்சக நாரியர்தம்
மானந்தக் கண்ணி வலையூடு சிக்கி மருண்டனனே 55

மருண்டமைக் கண்மட வார்முலைப் போகத்தின் வாஞ்சைமுற்றி
இருண்டநெஞ் சுள்ளத் தமியேன் றனக்கும் இலங்கும் கொல்லோ
வெருண்டவ ருள்ளம் களிகூரு மாற்றம் விளம்புநலம்
தெருண்டவல் லோர்புகழ் தென்புது வாபுரிச் சேயருளே 56

சேய பவளத் திருவாய் திறந்தன்று செப்பியசொல்
மாயமென் றெண்ணவும் அஞ்சுகின் றேன்,அந்த வாறுலகில்
தீயவர் நாணவும் காண்கின்றி லேன்,என்ன செய்வான் அந்தோ
தூயவர் சேர்புது வாபுரி வாழ்அயிற் சுந்தரனே 57

சுந்தர சண்முகத் திங்களும் நீபத் தொடையணிந்த
மந்தரத் திண்புயம் ஈராறும் பாத மலர்த்துணையும்
அந்தரத் தோர்புகழ் வேலும் மயிலும் அழிவதென்றோ
கந்தரப் பூம்பொழில் சூழ்புது வாபுரிக் காவலனே 58

காவகத் திந்திரன் ஆதியர் கண்டு களிக்குமுன்னைப்
பாவகத் தாற்பணி வேன்றனக் கேதும் பயனில்லையோ
நாவகத் துற்றவள் கேட்கச் சுருதி நவின்று முழுச்
சேவக ளுகி மயில்மேற் புதுவையிற் சேரண்ணலே 59

சேரார்க்குள் அஞ்சித் தினந்தோறும் போற்றுமென் றீவினையைத்
தீரா திருப்பது நீதிகொல் லோ,பெருஞ் சீர்ப்புதுவை
ஊராளும் சண்முக னே இரங் காநெஞ் சுனக்கும் உண்டோ
ஆராதிப் பார்க்கெளி யாய்என நூல்கள் அறைந்தனவே 60

அறைகின்ற தொண்டகப் பேரொலி காட்டும் அணிக்குறிஞ்சிக்(கு
இறைவன் புதுவைப் பதியில்வந் தான்சங்கம் ஈன்றமணி
நிறையுங் கடற்றுறைச் சீராலும் வேத நெறியுணர்ந்து
பொறைகொண்ட வேதியர் தம்மாலும் செந்திலைப் போன்றதென்றே 61

என்றும் சசியும் இசைந்தாங் கிலங்கும் எழில்மகுடம்
துன்னும் திருமுகம் ஓராறும் நாடித் துதித்துருகி
நின்றும் பரதவித் தேன்,விலை யாட்டொன்று நீபுரிவாய்
கொன்றுண்கி லார்வளர் தென்புது வாபுரி கொண்டவனே 62

கொண்டல் உலவக் குளிர்சோலை தோறும் நற்கோதையரோ(டு
அண்டர்வந் தாடும் புதுவா புரியில் அறுமுகனைப்
பண்டடி யேன்துதித் தெண்ணிய வாறு பரிசிபெற்ற(து
உண்டந்த வண்ணம் பெறலாமென் றேயின்னும் உற்றனனே 63

உற்றார் உறவர் முதலா உரிமை யுடையவர்கள்
மற்றாரும் நீயெனத் தெண்டனிட் டேத்துமென்
வாஞ்சைபொய்யோ
கற்றார் உறைபுது வாபுரி யாய்! தமிழ்க் காவலனும்
பெற்றாரும் ஒன்றைப் பெறுமா றளித்த பெருந்தகையே 64

பெருந்தகைக் குஞ்சரி யார்மனம் நோவமுன் பீலிஉடுத்(து)
இருந்தவட் காசைகொண் டாய், அத னால்உனை என்றும்நம்பும்
அருந்தவர்க் கச்சமு றுதென்னை அட்கொண்டருள்தரலாம்
கருந்தனப் பூண்முரு காபுது வாபுரிக் காங்கெயனே 65

காங்கேயன் தென்புது வாபுரிக் கோயிற் கடவுள்மைந்தன்
தீங்கேதும் செய்தறி யார்உளத் தோங்கும் செழும்பதத்தோன்
யாங்கேள்விப் பட்டமட் டிற்புகழ் பாடற்கும் யாவும் உணர்ந்(து
ஆங்கேயப் போற்றும் பெரியோர் துதிக்கும் அடுத்தவனே. 66

அடுக்கிய அண்டப் பகுதிகள் தோறும் அவிர்ந்துதொண்டர்
இடுக்கண் எல் லாம்தவிர்த்(து) ஆள்வோன் எவன், என
யாம்உணரில்
கொடுக்கும்நல் லோர்மிகும் தென்புது வாபுரிக் கோவிலுக்குள்
எடுக்கும் சிகிப்பரி மேல்விளை யாடும் இளங்குருந்தே 67

இளங்குருந் தாகிச் சரவண வாவி யிடங்கிடந்து
களங்கமில் லாதபொய் யாமொழி பால், அடற் காளையிற்போய்
உளங்கசிந் தேனல் வனத்தோர் கிழமுனி யொத்துநின்றோன்
விளங்கும் புதுவைப் பதிக்கோயில் வாழ்வெற்றி வேலவனே 68

வேலும் குலிசமும் சூலமும் தாங்கி விபுதரொடு
மாலும் புகழும் சமராடித் தானவர் வாழ்வொழித்தோன்
சேலும் கமலமும் செய்யிடத் தோங்கித் திரைத்தடங்கள்
போலும் புதுவைப் பதியாளும் கீர்த்தி புனைகந்தனே. 69

புனைமா மலர்க்குழற் றெய்வானை கேள்வன் புனக்குறத்தி
தனைமால்கொண் டன்று திருடிவந் தோன், விழித் தண்ணருளால்
வினைமாசொழிக்கும் குகவேள் புதுவையில் மேவினர்க்கும்
அனைமார் வயிற்றிற் புகுதா மெய்வீடெய்தும்ஆர்வமுண்டே. 70

ஆர்வேய்ந்த சென்னிப் பெருமான் புதுவைக் கணிவிளைக்கும்
கூர்வேல் முருகக் கடவுளுக் கேகரம் கூப்புநரைப்
பார்வேண்டும் பாதலம் வேண்டும், புலவர் பரவுபைம்பொன்
ஊர்வேண்டும் என்(று)எண்ணில் வேதாக மங்கள்
உரைக்குமன்றே 71

உரைக்கரும் பைம்பொன் மதிலார் புதுவை யுறையும்பிரான்
திரைக்கருஞ் சாகரத் தோங்கிய மாவைச் செகுத்தசெவ்வேள்
விரைக்கம லாலயத் தான்அழ மோதிய வீறுரைத்தால்
கரைக்கடங் கா இன்பம் என்னுள்ளத் தேவந்து காணுறுமே 72

காணுங் கருத்துடை யார்க்கந்த வாறருட் காட்சிநல்கிப்
பேணுங் குமரப் பெருமாள், வளரும் பிறைமுடித்தோன்
பூணுங் கழற்குக வேள்புது வாபுரி பொன்னுலகு
நாணும் கவினுற்ற தென்றுரைப் பாரெண்ணில் நாவலரே 73

நாவலம் பொன்னிற் சமைத்தபல் பூண்களை நன்றமிழ்த்தீம்
பாவலங் கற்குச் சரியாகு மென்றும் பகர்வைகொல்லோ
ஆவல்கொண் டன்றழற் பாலையிற்போன(து) அயத்ததுவோ
மூவவில் லாப்புது வாபுரி மேய முருகையனே. 74

முருகா, கடம்பும் குவளையும் செச்சையும் மொய்க்குரவும்
பொருகாமர் உற்றதுன் சொல்என்ன வந்து புகலல்பொய்யோ
ஒருகாலத் தன்மைமற் றோர்காலம் மாறல் உனக்கும்உண்டோ
முருகார்க்கும் கேதனத் தாய்புது வாபுரிக் கொற்றவனே 75

கொற்றவிற் காவவர் பைம்புனத் தூடொரு கோதைகண்முன்
நற்றகை வேங்கை மரமாம்உனக்கிங்கு நான்புரியும்
குற்றமெல் லாம்பொறுத் தாண்டத ஹற்புகழ் குன்றிடுமோ
நெற்றடஞ் செய்மலி சீர்ப்புது வாபுரி நின்றவனே. 76

நின்றுவல் கொண்டு பரதவித் தேங்குமென் நெஞ்சகத்தில்
பொன்றுசை வந்து புகலாகு மோதென் புதுவைநகர்
மன்று, நெடிய வடிவேல வா இந்த வம்பைஒழித்(து)
இன்றுனும் மெய்யடி யான்என மூதுல கேத்தவையே 77

வையுந் தொழிலிற் சலியாத நான்உன்னை வாழ்த்திஅன்பு
செய்யும் புலமைக் கவுமாரர்க் கானமெய்ச் சீர்விழைந்தேன்
உய்யும் படிக்கருட் செய்வாய் புதுவையில் உற்றநல்லோர்
மெய்யும்நன் நாவும் மனத்தோடு கைக்கொண்ட வித்தகனே 78

வித்தாகி மாதவ மாம்பயி ரோங்க விளைத்துநிற்கும்
மெய்த்தா ரகப்பொருட் சீர்தமி யேற்கும் விளம்புவையோ
கொத்தா ரிதழிச் சடையாற்கும் தென்றற் குவட்டினற்கும்
சத்தாதி மூன்றும் பகர்ந்தாய் புதுவைச் சரவணனே 79

சரபம தான பெருமான் புதல்வன், தனிமடங்கற்
சிரமொடு தோன்றும் திருமால் மருமகன், தென் புதுவைப்
புரவலன் குன்றங்கள் தோறுந் திரியும் புனிதன்என்பார்
பரமத வாணர்க் கிடியே றெனும்சொல் பழுதல்லவே. 80

அல்லார் நெடுங்குழற் பாவைய ராடும் அணிப்புதுவைக்(கு)
எல்லா நலமும் பொருந்தவைத் தென்னை இகழ்ந்துலகோர்
சொல்லா மலும்செய்ய வல்லானன் றேபசுந் தோகையின்மேல்
கொல்லா விரதர்முன் போய்வரும் ஞானக் குருபரனே. 81

குருவும் கடவுளும் நீயேயென் றேர்ந்துகை கூப்புமெனைச்
சருவும் பரசம யத்தினர் கூட்டம் தலைதகர்ந்து
திருவும் சிறப்பும் அழிந்தோடல் என்றுகொல் தென்புதுவை
மருவும் களப முலைக்குறப் பேதைக்கு வாய்த்தவனே 82

வாயத னூற்றுதித்(து) உள்ளன்பி னோடு மனத்தில்உன்னி
காய மெலியப் பணிசெய்க லேன்எனைக் கைவிட்டிடேல்
வேயன்ன தோளுடைத் தெய்வானை வள்ளி விரும்பும்எழிற்
சேயவ னேபுது வாபுரி மேவிய சிற்பரனே. 83

சிற்பர்செய் தாரெனச் சொற்றிக ழாதுன் திருவுருவைப்
பற்பல வாறு தொழுதேத்தப் பெற்றும் பரதவித்து
நிற்பதுன் சம்மத மோ,புது வாபுரி நித்தியனே
சொற்பனத் திற்றமி யேனுடன் ஓர்மொழி சொன்னவனே 84

சொன்னசொல் அத்தனை யூடொன்று மெய்ப்படில்,
துங்கவிண்ணோர்
மன்னவன் நானும் பெருவாழ்வுள் ளாரும் மதித்திறைஞ்சும்
நன்னலம் பெற்றுய்கு வேன்அல்ல வோ,தமிழ் நாவலர்க்கோர்
முன்னவ னேபுது வாபுரிக் கோயில் முருகப்பனே 85

கப்பணம் சூலம் கயிறேந்தி முன்வரு காலனைவென்(று)
எப்படி நின்பதம் சேர்வதென் றெண்ணிஉள் ஏங்குமென்னைப்
பொய்ப்பயன் வேண்டும் அவர்போற் றிரிந்து புலம்பவிட்டாய்
துப்பவிர் மேனிக் குகனே புதுவைச் சுராதிபனே 86

சுரபதி நான்முகன் மால்உண ராநின் துணைப்பதங்கள்
சிரமுறப் பெற்றுத் திரிவார்க்கும் காசினிச் செம்பொன்இச்சை
வரல்உள தென்று சிலர்கூறக் கேட்டுள்ளம் வாடுகின்றேன்.
புரவல னாகிப் புதுவா புரியைப் புரப்பவனே. 87

புரப்பது கொண்ட நெடுமால் மருகன், புனிதச்செவ்வேள்
இரப்பவன் சொந்த மகனா யிருந்தும் இரக்கமின்றி
கரப்பவர் போற்றிகழ்ந் தான்,அந் தரங்கக் கருத்தறியேன்
உரப்பருந் தாழை யலிபுது வாபுரி ஊரவரே. 88

ஊரில் உயர்புது வாபுரி வேலவ! உன்குலததிற்
பாரில் அமுதிரந் தான்தந்தை, மாமன் படியிரந்தான்
சீரிய முன்னவன் பூஇரந் தான்,தினைச் சிற்றுண்டிஓர்
காரிகை பாலிரந் தாய்இர வரதவர் காண்பரிதே. 89

காண்பார் வினைஒழிக் குங்கந்த வேலைக் கனகமணித்
தூண்போலும் பன்னிரு தோளானைச் செஞ்சொற் றுதிமுழங்கும்
மாண்போங்கு தென்புது வாபுரிக் கோயிலில் வாழ்குகனை
வீண்போது போகவொட் டாதுன்ன லேவைப்பில் மெய்த்தவமே 90

மெய்த்தவம் வேண்டுமென் பாற்கனற் போலும் மிடிவந்ததால்
பொய்த்தவர் போலுழன் றேன்அறி யாய்கொல், புதுவைநகர்ச்
சித்தச னே! இது தீர்த்தென்னை நின்றிருச் சேவடிக்கீழ்
வைத்தருள் வாய்ஐய கோபல வாறு வருந்தினனே. 91

வருந்தித் தவம்புரி யாதெழில் மாதர்செவ் வாயிதழ்த்தேன்
அருந்தித் திரியும் கொடியோர்க்கு நாணி அகங்குலைந்தேன்
செருந்திப் பொழில்மலி யும்புது வாபுரிச் சேயருளிற்
பொருந்திக் களிக்கும்வல் லோர்திருக் கூட்டம் புகுவதென்றே. 92

புகுமனை தோறும் பலமாதர் நிந்தை புகன்றுமிக
நகுவதற் கொல்க லுருதன்னம் ஏற்றுண்டு நற்றவம் செய்(து)
உகுபுனற் கண்ணே டுனைநாடி உள்ளம் உருகும்நலம்
தகுமெனத் தந்தருள் வாய்புது வாபுரிச் சண்முகனே. 93

முகமன் பகர்ந்து பொருளாளர் தம்மனை முன்றிலில்நின்(று)
அகம்நொந்து வாடும் தமியேனை ஆண்டருள், ஆரணங்கள்
பகரும் பெரும்புக ழோனே புதுவைப் பதிக்குகனே
தகருந்து சேவக னேஉனைப் போலொரு தஞ்சமின்றே. 94

தஞ்சமும் துங்கத் தனிவேலும் முத்திரை தாங்குகையும்
எஞ்சலு ருத்திரு வெண்ணீற்றுச் சீரும் இலங்கவந்து
வஞ்சக மின்றிய மெய்ஞ்ஞான வாழ்வை வழங்குவையோ
குஞ்சரம் ஆர்க்கும் புதுவையில் மேவும் குணக்கொண்டலே 95

கொண்டவ ருள்ளக் குறிப்பறிந் தெண்ணில்பல் கோலமெடுத்(து)
அண்டரும் போற்ற விளையாடும் நின்னருட் காசையுற்றும்
வெண்டர ளம்பொரும் வாள்நகை யார்க்கும் வெருண்டயர்ந்தேன்
கண்டடி யாருள்வைப் பாய்புது வாபுரிக் கந்தப்பனே 96

கந்தப் பனிமலர்ச் செங்கடம் பாரம் கமழ்புயத்தில்
சந்தப் பசுங்கிளி ஒன்றுவைத் தாய்எனச் சாற்றும் என்பால்
அந்தப் பரம ரகசியங் கூறி அழுங்கவைத்தாய்
இந்தப் படிசெய்த தேனோ புதுவையில் எம்மிறையே 97

இறையள வேனும்நின் ருட்கன்பி லாரொ(டு) இணங்கியுள்ளக்
குறையையெல் லாமும் பகர்ந்தலுத் தேன்உட் குறித்தபடி
முறைமுறை வந்து களிகூரச் செய்துண்மை மோனம்நல்காய்
மறைமுழங் கும்புது வாபுரி வாழ்மயில் வாகனனே 98

வாகார் புதுவைப் பதிக்கந்த னேயன்றி மற்றொருவர்
சாகாப் புகழும் பிறவாத வீடும் தரவல்லரோ
பாகாய சொல்மட வார்தரு மோகப் படுகுழியுள்
ஆகாமல் என்றும் அவனே பரமென் றணுகுநெஞ்சே 99

நெஞ்சகந் தன்னிற் பலவாறு தோன்றி, நெடியதிண்கைக்
குஞ்சர மாமுகன் பின்வரும் ஞானக் குருபரவேள்
கஞ்சனைக் குட்டிய கையான் புதுவைக் கடவுள் நல்கும்
அஞ்சல்பெற் றும்பின்னும் அஞ்சுகின் றேன்மெய் யருள்பெறவே 100

ஆறுமுக வேள்புதுவை அந்தாதி தன்னில்உள்ள
நூறு கவியும் நுவன்றக்கால் - வேறும்
ஒருவர் அறியாத உண்மைநலம் காட்டிச்
சருவபிர சாதந் தரும்



## இந்நூலாசியரால் புதுவை நகர்க்கு இயற்றப்பட்டுள்ள வேறு நூல்கள்

| | | |
|---|---|---|
| ஆவணவீதி விநாயகர் பதிகம் 2 | 24 | பாடல் |
| ,, ,, மும்மணிக்கோவை | 32 | ,, |
| ,, ,, திருப்புகழ் | 1 | ,, |
| ,, ,, வகுப்பு | 1 | ,, |
| திருப்புகழ்ப் பதிகம் | 12 | ,, |
| குருபரன் வகுப்பு | 1 | ,, |
| பூதவேதாள வகுப்பு | 1 | ,, |
| சிவன் பதிகம் 4க்கு | 48 | ,, |
| திரிபுரசுந்தரி பதிகம் 1 | 12 | ,, |
| பெருமாள் பதிகம் 2 | 24 | ,, |
| ,, வகுப்பு | 1 | ,, |
| ,, திருப்புகழ் | 1 | ,, |
| வரதராச பெருமாள் வெண்பா | 1 | ,, |
| ,, திருப்புகழ் | 1 | ,, |
| வடபுதுவை பெருமாள் பதிகம் 1 | 12 | ,, |
| ,, விநாயகர் பதிகம் 1 | 12 | ,, |
| வேத சிவன் பதிகம் 2 | 24 | ,, |
| | 208 | |